




-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:82 சித்திரை- 18--தி.பி.2055 மே—1--- பொ.ஆ.2024*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

இந்த இதழில்....

# புரட்சிக் கவிஞர் புகழுடல் எய்தினார்





- பேராசிரியர் முனைவர் சி.இலக்குவனார்

தமிழிலக்கிய வானில் எழிலுறு ஞாயிறாக இலங்கித் தம் இன்றமிழ்ப் பாக்கதிர்களால் மூட நம்பிக்கை இருளைப் போக்கிக் கொண்டிருந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் சித்திரைத் திங்கள் 9ஆம் நாளில் (21-4-64இல்) பூதவுடல் நீக்கிப் புகழ் உடல் எய்திவிட்டார். அச்சமின்றி ஆண்மையுடன் அடிமை நிலையை எதிர்த்து அழகிய பாடல்களை எழுதிய கைகள் அயர்ந்துவிட்டன; சூழ்ந்திருப்போர் விருப்பு வெறுப்பினை நோக்காது உள்ளத்தில் தோன்றியனவற்றை ஒளிமறைவின்றி முழங்கிய வாய் ஓய்ந்துவிட்டது. எழுபத்துமூன்று ஆண்டுகள் இவ்வுலகில் நடமாடிய கால்கள் சாய்ந்துவிட்டன. இனி நம் ஏறனைய பீடு நடைப்பெரும் புலவரைப் பூதவுடலில் யாண்டுமே காண இயலாது. ஒப்பாரும் மிக்காருமின்றி உயர்பெரும் புரட்சிக் கவிஞராய் மக்களுளங்களில் இடம் பெற்றிருந்த பாரதிதாசனார் பாரைவிட்டுப் பிரிந்துவிட்டார்.

''நெருநல் உளன் ஒருவன் இன்றில்லையென்னும்

பெருமையுடைத்தன்றோ இவ்வுலகு''.

பலவகை மூட நம்பிக்கைகளால் பாழ்பட்டிருந்த தமிழக மன்பதையை உய்விக்கத் தோன்றி உலையாது பணியாற்றிய பெரியார் ஈ.வே.இராமசாமி வழிநின்று புதுமுறைத் தமிழ்ப் பாடல்களைக் கருவியாகக் கொண்டு சாதிக் கொடுமை, பெண்ணடிமை, புரோகிதப் பாம்பு முதலியவற்றை எதிர்த்துப் போராடிப் புகழ் பெற்றார். சங்ககாலப் புலவர்களைப் போன்றும் இற்றைநாள் மேனாட்டுக் கவிஞர்களை ஒத்தும் இயற்கையையும் மக்கள் வாழ்வையுமே பாடற்பொருளாகக் கொண்டார். எத்துறையிலும் அடிமைப்போக்கை மறுத்து முழங்கியமையால் ஆங்கிலப் புலவர்களில் செல்லி, பைரன், வேர்ட்சுவொர்த்து போன்றவர்கட்கு ஒப்பாகப் போற்றப்பட்டார். ஏனையநாடுகளில் தோன்றியிருப்பரேல் இவர்க்கு உலகப் பெரும் புகழ் எளிதில் கிட்டியிருக்கும். தம்மவரை மதிக்காத தமிழ்நாட்டில் தோன்றிவிட்டார்.

அயல்நாட்டு ஆங்கிலப் புலவராம் சேக்சுபியரின் நானூறாவது ஆண்டு விழாக் கொண்டாட்டத்தில் ஆர்வம் காட்டும் நம்நாட்டு இதழ்கள் அதில் நானூற்றில் ஒரு பங்கு கூட அவர் மறைந்த செய்தியை வெளியிட்டு வணக்கம் செலுத்துவதில் ஆர்வம் கொண்டில. கவிஞராக மட்டுமின்றி நாடக ஆசிரியராகவும் திரைக்கதை, உரையாடல் எழுதும் கலைஞராகவும், சீர்திருத்தப் பெரியாராகவும் திகழ்ந்த இவரை நாம் என்றும் மறத்தற்கின்று.

தமிழ் மொழியினிடத்தில் தணியாத ஆர்வமும் அதைக் காத்து ஓம்புவதில் உலையா முயற்சியும் உடையவர்.

''யாம் அறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்

இனிதாவது எங்கும் காணோம்''.

என்று உண்மையை ஒளியாது கூறிய அவரது குருவெனக் கருதப்படும் தேசீயப் பெரும் புலவர் பாரதியாரினும் பாவேந்தர் பாரதிதாசனின் தமிழ்ப் பற்று அளவிட்டுரைக்க இயலாததாகும். பாவேந்தர் இயற்றியுள்ள 'இன்பத்தமிழ்' எனும் பாடலும், ''தமிழியக்கம்'' நூலும் தக்க சான்றுகளாகும்.

‘‘இன்பத்தமிழ்’’ எனும் பகுதியில்

“தமிழுக்கும் அமுதென்றுபேர் – அந்தத்

தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்’’

‘‘தமிழ் எங்கள் இளமைக்குப் பால் – இன்பத்

தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்குவேல்’’

‘‘தமிழ் எங்கள் பிறவிக்குத்தாய் – இன்பத்

தமிழ் எங்கள் வலமிக்க உளமுற்றதீ’’

என்று அவர் தமிழார்வம் பொங்கிப் பொலிவதைக் காணுங்கள்.

தமிழியக்கத்தில் பல்வேறு நிலையில் உள்ளவர்களும் தமிழ்ப்பற்றும் புலமையும் உடையோராய்த் தமிழைக் காத்தல் வேண்டும் என்பதை அழகுற ஆண்மையுடன் எடுத்தியம்பியுள்ளார்.

‘‘அரசியல் சீர்வாய்ந்தார்’’ எனும் பகுதியில்

‘‘தமிழாய்ந்த தமிழன்தான் தமிழ்நாட்டில்

முதலமைச்சராய் வருதல் வேண்டும்.

தமிழ்ப் பகைவன் முதலமைச்சராய்த் தமிழ்நாட்டில்

வாராது தடுத்தல் வேண்டும்’’

என்று அறைகின்றதை அறிமின்.

இந்தி முதன்மையை எதிர்த்துப் புலவரை நோக்கிப் பின்வருமாறு அழைப்பு விடுத்துள்ளார்.

‘‘சொந்தமொழி பயின்றிடற்குத் திட்டம் செய்யார்

சோதாக்கள், தறுதலைகள், ஒன்றுசேர்ந்தே

இந்தியினைப் பொது மொழியாய்க் கொள்கவென்றே

இந்நாட்டில் வற்புறுத்தல் செய்தோர் அந்தோ!

இந்தியிலே இலக்கணமோ கலைப்பெருக்கோ

எள்ளளவும் கிடையாதே! ஆளவந்தார்

செந்தமிழ்க்கு வல்லூறாய் வாய்த்தார் என்ற

செய்தியினை யறிந்தாலே சிரிக்கும் வையம்

கொந்தளிக்கும் தமிழ்ப் புலவீர்! தமிழைத் தீயர்

கொன்றழித்தால் நும்வாழ்வு சிறப்பதெங்கே?

செந்தமிழைக் காத்திடற்கு நீவிரெல்லாம்

சேர்ந்தொன்றாய்க் களநோக்கி விரைந்து வாரீர்.’’

இவ்வாறு தமிழைக் காக்க அல்லும் பகலும் அயராது உழைத்த அரும்பெரும் பாவலர் இவ்வவனியினின்றும் அந்தோ அகன்றுவிட்டாரே!அன்னைத் தமிழ்காக்க இனியாருளர்?

குறள்நெறி: சித்திரை 19. தி.பி.1995 / மே 1, கி.பி.1964

http://www.akaramuthala.in/modernliterature/kavithai

சாகித்தியமா?சங்கீதமா?

# பாடல் பெரிதா?பண் பெரிதா? --------திருவள்ளுவர் தீர்ப்பு

பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்

கண்ணோட்டம் இல்லாத கண். [பொருட்பால்-அதிகாரம்: கண்ணோட்டம் -குறள் 573]

மணக்குடவர் உரை:

பண் என்ன பயனுடைத்தாம், பாடலொடு பொருந்தாதாயின். அதுபோலக் கண் என்ன பயனுடைத்தாம், கண்ணோட்டமில்லாத காலத்து. இது பிறர்க்கும் இன்பம் பயவாதென்றது.

இலக்குவனார் உரை:

பாடல் பொருளுக்குப் பொருத்தமில்லையேல் பண்ணால் என்ன பயன் உண்டு? அதுபோலக் கண்ணோட்டம் இல்லாத கண் என்ன பயனைத் தரும்? ஒன்றுமில்லை.

மு.வரதராசன் விளக்கம்:

பாடலோடு பொருந்துதல் இல்லையானால் இசை என்ன பயனுடையதாகும், அதுபோல் கண்ணோட்டம் இல்லாவிட்டால் கண் என்ன பயனுடையதாகும்.

கலைஞர் விளக்கம்:

இரக்க உணர்வு, அன்பு எனும் கண்ணோட்டத்துடன் பொருந்தி வராத கண்ணும், பாடலுடன் பொருந்தி வராத இசையும் பயன் தராதவையாகும்.

1)பண் என்பது வழிவழிவருவது;இசை அமைப்பாளர்கள் யாரும் எந்தப் பண்ணையும் உருவாக்குவதில்லை. ஆனால் கவிஞர்கள் படைப்பாளர்கள்.புதிதாகப் பாட்டைக் கட்டுகிறார்கள்.

உடுமலை நாரணகவியின் பாடல்களுக்கு இசையமைத்தவர்கள் பற்றியோ அவர் பாடல்களின் இராகக் குறிப்புகள் குறித்தோ கால ஓட்டத்தில் மறந்துவிடுகிறோம்.இறைமறுப்பு பற்றியும் சமதருமம் குறித்தும் அவர் யாத்த பாடல்களை அச்சில் பார்த்தாலே எழுச்சியும் கிளர்ச்சியும் இயல்பாக ஏற்படும்.

2) கருவிகளின் துணைக்கொண்டும் முன்னோர் உருவாக்கிச் சென்ற இராகக்குறிப்புகளைக் கொண்டும் யார் வேண்டுமாயினும் இசையமைக்கலாம்.ஆனால் இயக்கச்சார்பும் சமூக ஓர்மையும் காலத்துக்குக் காலம் மாறுபவை.அந்தந்தக் கவிஞர்களின் சமூகப்பார்வைகள் அவரவர் சமூகச்சூழலாலும் இயக்கப்பின்புலத்தாலும் ஏற்படுபவை.

காமாட்சிநாதன்,நாரணகவி,கா.மு.செரீபு,கண்ணதாசன்,பட்டுக்கோட்டையார் என்னும் ஆளுமைகள் ஏற்படுத்திய எழுச்சியும் கிளர்ச்சியும் போன்று இசையமைப்பாளர்களால் சமூகத்தில் தாக்கம் ஏற்படுத்த முடியுமா?ஏற்படுத்தியதாகச் செய்தி உண்டா?

3) மொழியைக் கருவியாகக் கொண்டு தம் சிந்தனையை வடிவமைத்துப் பாடல் இயற்றிச் சமூகத்தைச் சிந்திக்கத் தூண்டி அறிவுக்கு விருந்தளிப்பவர்கள் கவிஞர்கள். இசைக்கலைஞர்கள் சமூகத்தைப் பற்றிக் கவலைப்பட்டதாக வரலாறு இல்லை.

## ஏன் சொன்னார் பாவேந்தர்?

**மறைமலை இலக்குவனார்**

“தமிழுக்கும் அமுதென்று பேர்-அந்தத் தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்” என்றார் பாவேந்தர் பாரதிதாசன்.இப்பாடலில் தமிழுக்கும் என்று உம்மை கொடுத்துப் பாடியது ஏன் என்னும் வினா நெடுங்காலமாக எழுப்பப்பட்டுவருகிறது. வாழையடிவாழையென வந்த தமிழ் மரபை நோக்கினால் இவ்வினாவுக்கு உடனே விடை கிடைத்து விடும் தமிழ் இறைவனார் எனப் பாரதிதாசனால் போற்றப்பட்ட .திருவள்ளுவர் அமிழ்து என்று மழையைக் குறிக்கிறார்.

”வானின்று உலகம் வழங்கிவருதலால்
தான் அமிழ்தம் என்று உணரற்பாற்று.(வான்சிறப்பு-1)”

என்னும் குறள் இதனைத் தெளிவுறுத்துகிறது.

அமிழ்தம் என்பது என்ன? சாவாமருந்து.

சாவாமருந்து என்பது யாது? உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத சோறும் நீரும் சாவாமருந்து எனப்படும்.

நோயே ஏற்படாத நலமிக்க உடலையும் பசி/தாகம் அல்லது நீர்-வேட்கை என்னும் இரு நோய்கள் நாள்தோறும் தாக்கும்.இந்நோய்களுக்கு மருந்தாகிய சோறும் நீரும் வழங்காவிடின் சாவு அல்லது இறப்பு உறுதி.எனவே இவற்றை இருமருந்து எனல் தமிழ் மரபு.

”இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்”(புறம்70 )என்னும் புறநானூற்றுப் பாடலைச் சான்றுகாட்டலாம்.

சோற்றிலும் நீரிலும் அமைந்துள்ள உணவுக்கூறுகள் அல்லது சத்துப் பொருள்கள் பாலில் ஒருசேர அமைந்துள்ளதாக நம் முன்னோர் கருதியமையால் பாலையும் அமுதம் என்று கருதினர்.சோறு,நீர்,பால் ஆகியவை மழைதவறினால் கிடைக்காமல் போய் உயிர்கள் பட்டினிச்சாவால் மடிதல் உறுதி என்பதால் மழையை அமிழ்தம் என்றார் திருவள்ளுவர்.இம்மரபு தெரிந்த பாரதிதாசன் தமிழுக்கும் அமுது என்று பேர் என்றார்.உடலுக்குப் பசியும் வேட்கையும் எழுதலைப்போலவே உயிருக்குப் பசியும் வேட்கையும் எழுகின்றன.புகழ் என்னும் பசியும் அறிவைப் பெருக்கவேண்டும் என்னும் வேட்கையும் எழாத உயிர் மனித உயிர் என்று மதிக்கத்தக்கது அன்று.இந்தப் புகழ்ப்பசியையும் அறிவுவேட்கையையும் தணிக்கும் ஆற்றல் வாய்ந்தது தமிழ் என்பதால் தமிழுக்கும் அமிழ்தென்று பெயர் என்றார். மழை உடலின் பசியையும் வேட்கையையும் மட்டுமே போக்கும்.ஆனால் தமிழ் உயிரின் பசியையும் வேட்கையையும் போக்கும் என்பதால் மழையினும் மேன்மை மிக்கது தமிழ் என உணர்த்தும் பாவேந்தரின் தமிழ்க்காதலுக்கு ஒப்பும் உவமையும் காட்டமுடியுமா?



**ஈழவேந்தன் இயற்கையெய்தினார்**

**மாணிக்கவாசகர் கனகசபாபதி ஈழவேந்தன் (14 செப்டம்பர் 1932- 28 ஏப்ரல் 2024) இலங்கைத் தமிழ் அரசியல்வாதியும், முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினரும் ஆவார். தமிழ்நாட்டில் அவர் இருந்தபோது பல தருணங்களில் அவரோடு பழகும் வாய்ப்பும் சில அறப்போராட்டங்களில் ஒருங்கிணைந்து செயலாற்றும் வாய்ப்பும் பெற்றேன்.யாழ்ப்பாணத் தமிழறிஞர் கதிரைவேற்பிள்ளை அவர்களின் வழிமரபினர்.அவர் தளைப்படுத்தப்பட்டபோது விடுவிக்கவேண்டும் என அரசைவேண்டிக் கையெழுத்துப் போராட்டமும் நண்பர் பலருடன் இணைந்து நடத்தியுள்ளேன். அவரது திருமகள் இளங்கலை பயின்றபோது பொருளாதாரப் பாடத்திற்குரிய பாடநூல்களை என் துணைவியார் வழங்கினார்.குடும்பத்தினருடன் எங்கள் இல்லத்திற்கும் வந்துள்ளார்.அவர் மறைவு இந்தப் பழைய சிந்தனைகளைக் கிளறிவிட்டது.அவரது பிரிவால் பெரிதும் வருந்தும் குடும்பத்தினர்க்கும் நண்பர்களுக்கும் ஈழத் தமிழ்ச் சுற்றத்துக்கும் “ குறள்நெறி”யின் ஆழ்ந்த இரங்கல்.(ஆசிரியர்.)**



## தனிநாயக அடிகளார் பார்வையில் திருவள்ளுவர்

தமிழறிஞர்களுள் ஒரு தனித்த சிறப்புவாய்ந்த நாயகராகத் தனிநாயக அடிகளார் புகழ்நிறுவியுள்ளார். தமிழறிஞர்களுள் மட்டுமன்று —உலகத்தில் அவர் காலத்திலும் இக் காலத்திலும்- மொழியறிஞர்களுள்ளே அவருக்கு இணையாக வேறொருவரைச் சுட்டல் இயலாது.பதினான்கு மொழிகளில் [1] புலமையும் , ஐம்பத்தொரு நாடுகளில்[2] பயணம் செய்து மக்களொடு பழகிப் பல்வேறு பண்பாட்டுச் சூழல்களையறிந்த பட்டறிவும் , வாய்க்கப்பெற்ற தனிநாயக அடிகளார் , தமது அறிவின் விரிவினாலும் , புலமையின் ஆழத்தாலும் ஆய்வுலகின் கலங்கரைவிளக்கமாகத் திகழ்ந்தார்.அவரது முன்னோடிப் பணிகள் நெடுங்காலத்திற்குத் தமிழ் ஆய்வாளர்களுக்கு வழிகாட்டும் ஆற்றலுடையவை.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறளைப் பற்றி அடிகளார் ஆற்றிய சொர்ணம்மாள் அறக்கட்டளைப் பொழிவு "திருவள்ளுவர்"என்னும் தலைப்பில் நூலாக வெளியிடப்பெற்றுள்ளது.இப் பொழிவில்

1.வள்ளுவரும் கிரேக்க ஒழுக்க இயலும்

2. வள்ளுவரும் உரோமியஒழுக்க இயலும்

3. வள்ளுவரும் புத்தரின் ஒழுக்க இயலும்

என்னும் மூன்று தலைப்புகளில் திருக்குறளுக்குத் தனித்தன்மை வாய்ந்த ஒப்பாய்வு நிகழ்த்தியுள்ளார்.
"வள்ளுவரும் கிரேக்க ஒழுக்க இயலும்" என்னும் தலைப்பிலமைந்த முதற்பொழிவில் உலக ஒழுக்க இயல் வரலாற்றினைச் சுருக்கமாகத் தமது முன்னுரையில் வழங்கியுள்ளார்.ஒழுக்க இயல் வரலாற்று வல்லுநர் ஒழுக்கத்தை,வழக்கு ஒழுக்கம்(Customary Morality),உணர்ச்சி ஒழுக்கம்(Conscious Morality),பகுத்தறிவு ஒழுக்கம்( Rational Morality) என வகுத்துள்ளமையை விளக்குகிறார்.
பண்டைத் தமிழ்மக்கள் ஒழுக்கத்தின் உணர்ச்சியில் வளர்ந்து விழுமியங்களையும் நல்லறங்களையும் பேணிவந்தனர் எனவும் மெய்யுணர்வின் விரிந்து பரந்த வளர்ச்சிக் காலத்தில் திருக்குறள் எழுதப்பெற்றிருக்கவேண்டுமெனவும் அடிகளார் கருத்துரைக்கிறார்.

---

[1]தமிழ்,ஆங்கிலம்,வடமொழி,கிரேக்கம்,இலத்தீன்,எபிரேயம்,பிரெஞ்சு,செர்மனியம்,இத்தாலியம், போர்த்துகீசியம்,எசுபானியம்,உருசியம்,சிங்களம்,மலாய்

[2] இந்தியா,மலாயா,சிங்கப்பூர்,தாய்லாந்து,கம்போடியா,வியத்துநாம்,அமெரிக்க் ஐக்கிய நாடு,பனாமா,மெக்சிகோ,பெரு,அர்சண்டீனா,ஈக்குவதோர்,சிலி,பிரேசில்,உருகுவே,டிரினிடாட், மாற்றினிக்,சோவியத்துஒன்றியம்,இங்கிலாந்து,பிரான்சு,இத்தாலி,செருமனி,ஆத்திரியா,கிரீசு, போர்த்துகல்,சுபெயின்,நார்வே,சுவீடன்,தென்மார்க்கு,பின்லாந்து,சுவிட்சர்லாந்து,ஆலந்து,பெல்சியம்,செனகல்,காங்கோ,அல்சீரியா ,துனீசியா,எகிப்து,சூடான்,எத்தியோப்பியா,உகாண்டா,கென்யா, தான்சானியா,மொரீசியசு,துருக்கி,இலெபனான்,ஈராக்,ஈரான்,பர்மா,இந்தோனேசியா,சப்பான்

ஒழுக்க இயல் குறித்த தொன்மையான எழுத்துச் சான்றுகள் எகிப்தில் தோன்றியவை.பிதாகோதேப் என்னும் அமைச்சரின் நூலையும் அமென் ஒமப்பே என்பவருடைய "பழமொழிகள்'என்னும் நூலையும் அடிகளார் சான்றாகக் காட்டுகிறார்.

பிளாத்தோ,அரித்தாட்டில் ஆகியோரின் ஒழுக்கக் கோட்பாடுகளை விரித்துத் திருக்குறளுடன் ஒப்புநோக்குகிறார் அடிகளார்.இருபக்கமும் சாராமல் எதிர்ப்பண்புகளுக்கு நடுவில் நிற்கும் தன்மையது அறம் என்பது அரித்தாட்டிலின் கோட்பாடு.எடுத்துக்காட்டாக ஈகையை விளக்குவதாயின் அஃது ஊதாரித்தன்மைக்கும் உலோபியின் தன்மைக்கும் இடையில் நிற்கும் பண்பு என்பர் அரித்தாட்டில்.'வாய்மை'என்பது மிகைபடக் கூறலுக்கும் தன்னையே இகழ்வதற்கும் இடையில் தோன்றும் பொய்யாமை என்னும் பண்பு என்பது அரித்தாட்டில் வழங்கும் விளக்கம்.

"வள்ளுவரோ வாய்மையின் உச்சநிலைமையைக் கூறினாரேயொழிய அஃது இரு எதிர்ப்பண்புகளுக்கு நடுவிலியங்கும் என்று வரைந்தார் அல்லர்."என அறுதியிடும் அடிகளார்

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்-குறள்-296

எனக் குறளையும் மேற்கோள் காட்டுகிறார்.

பிளாத்தோ-அரித்தாட்டில் வழங்கிய ஒழுக்கக்கோட்பாடுகளுக்கும் திருக்குறளுக்குமிடையே விரிவான ஆய்வை நிகழ்த்தியுள்ளார்,அடிகளார்.

"பிளாத்தோவினுடைய அரசு இவ்வுலகில் அமையினும்,அது விண்ணுலகில் இருக்கும் ஓர் அரசின் நிழலும் படியுமாம்.உண்மையான உலகம் மேலுலகிலேயே உண்டு.இங்கிருக்கும் உயிர்களும் பொருட்களும் மேலுலகில் இருக்கும் உயிர்களின் பொருட்களின் நிழற்படம். இவ்வுலகில் இருக்கும் ஒவ்வொரு பொருளிற்கும், அவ்வுலகில் குற்றமற்ற முதற்பொருள்-மூலப்பொருள் ஒன்று உண்டு. எனவே நிறைவு மேலுலகில்தான் உண்டு.இவ்வுலகில் உள்ளவையெல்லாம் குறைவுபடைத்தவை.வள்ளுவரோ மேல் உலகில் இருக்கும் ஒரு அரசினைப் படம்பிடித்து இவ்வுலகில் நிறுவ முயலவில்லை.திருக்குறளின் அரசு இவ்வுலகிற்கே உரிய அரசு.திருக்குறளின் அரசினுடைய நிறைவினை இவ்வுலகிலேயே மாந்தர் அடைகின்றனர்."

என்னும் அடிகளாரின் துணிபு அவரது ஒப்பாய்வின் விளைவு ஆகும்.

"கிரேக்கத் தத்துவ ஞானிகளின் நூல்கள் வள்ளுவர் நூலுடன் ஒப்பிடுங்கால் கிரேக்கத் தத்துவஞானிகள் மெய்யுணர்வு வல்லுநர்போல் பொருளை ஆராய்கின்றனர்.திருவள்ளுவரோ ஒழுக்க இயல் வல்லுநர்போல் ஆராய்ந்து ஆசான்போல் மக்கள் கடைப்பிடிக்கவேண்டிய அறங்களைக் கூறுகிறார்."

என்னும் ஆய்வுமுடிவு திருவள்ளுவரின் தனிச்சிறப்பை விளக்குகிறது.

"வள்ளுவரும் உரோமியஒழுக்க இயலும்" என்னும் தலைப்பிலமைந்த இரண்டாம் பொழிவு செறிவுமிக்க ஒப்பாய்வாகத் திகழ்கிறது.

"ஸ்டாயிக்வாதம்,எபிக்யூரஸ்வாதம்'என்னும் இரு கோட்பாடுகளையும் விரிவாக விளக்குகிறார்.மார்க்கஸ் ஔரேலியசு,செனக்கா எனும் இரு சிந்தனையாளர்களின் கருத்துகளைத் தொகுத்துவழங்கியதுடன் வீரமாமுனிவர் திருக்குறளைச் செனக்காவின் கருத்துகளுடன் ஒப்பிட்டதனையும் சுட்டிக்காட்டுகிறார்.

ஆய்வுமுடிவாக மூன்று கருத்துமணிகளை வழங்குகிறார்.

1.பல கோணங்களிலிருந்து உரோமையர் சொல்வன்மையைப் பற்றியும் நட்பைப் பற்றியும் காதலைப் பற்றியும் யாத்த இலக்கியங்களைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுநோக்குதல் கூடும்.காதலையும் நட்பையும் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துக்கள்,தன்னலம் கருதாது பிறர் நலத்திற்காகத் தம்மை முற்றும் நல்கும் வாழ்க்கையை வற்புறுத்துகின்றன.

2. உரோமையரின் காதல் இலக்கியத்தை வள்ளுவரின் காமத்துப்பாலுடன் ஒப்பிடுங்கால் வள்ளுவரின் கருத்துகள் உரோமையினும் பன்மடங்கு உயர்ந்தவையாக இருப்பதைக் காண்கிறோம்.பிலவுட்டஸ்(Plautus), கத்துலஸ்(Catullus), ஓவிட்(Ovid) போன்றவர்கள் கலவையும் கற்பையும் பற்றிய உயர்ந்த கருத்துகளைப் போற்றவில்லை.

3.நாம்,நம்மவர் என்ற செருக்குடன் உரோமைய ஆசிரியர் உரோமருக்குப் பயன்படும் முறையில் எழுதுகின்றனர்.ஆனால் வள்ளுவரோ எல்லா உலகிற்கும் எர்ல்லா மக்களுக்கும் பயன்படும் முறையில் தமிழோ,தமிழ்நாடோ என்ற குறிப்பேதும் இல்லாமல் உலகெர்லாம் தழுவுதற்குரிய பான்மையில் தம் நூலை யாத்துள்ளார்.

அடிகளாரின் இலத்தீன்மொழிப் புலமை நமக்கு அரியதோர் ஒப்பாய்வு கிடைக்க வழிவகுத்துள்ளது.

”வள்ளுவரும் புத்தரின் ஒழுக்க இயலும்”என்னும் தலைப்பிலமைந்த மூன்றாம் பொழிவில் பாலிமொழியில் இயற்றப்பெற்ற விநயபிடகம்,சூத்திரபிடகம் என்னும் தொகைநூல்களை அடிப்படையாகக் கோண்டு திருக்குறள் ஒப்பாய்வு நிகழ்த்தியுள்ளார். சூத்திரபிடகத்தில் அமைந்துள்ள சுத்தநிபாதம் என்னும் நூல் திருக்குறளுடன் ஒப்பிடத்தக்கது என்பது அடிகளாரின் கருத்து.

”தருமபதத்துடனும் ஏனைய நூல்களுடனும் வள்ளுவரின் நூலை ஒப்பிடுங்கால் வள்ளுவரின் நூல் இல்லறத்தின் சாசனமாக விளங்குவதைக் காண்கிறோம்.”

“புத்த ஒழுக்க இயல் “Pessimism” என்னும் இயற்பண்பினை அடிப்படையாகக் கொண்டது.......வள்ளுவருடைய ஒழுக்கஇயலோ “Optimism” என்னும் இயற்பண்பினை அடிப்படையாகக் கொண்டது.”

என்னும் அடிகளாரின் முடிபுகள் குறிப்பிடத்தக்கவை.

இப் பொழிவுகளின் முடிவில்

“வருங்காலத்தில் வள்ளுவரின் ஒழுக்க இயலை எபிரேயருடைய ஒழுக்க இயலுடனும் இச்லாமிய ஒழுக்க இயலுடனும்,தர்மசாச்திரங்களின் ஒழுக்க இயலுடனும் சீன ஒழுக்க இயலுடனும் ஒப்பிட்டுப் பயில எண்ணி உள்ளேன்.”

என்று அடிகளார் குறிப்பிட்டுள்ளார்.எனினும் அத்தகைய ஒப்பாய்வுக்குரிய சூழல் அமையாது போனது நமக்கு இழப்பே.